[9th February 1959

*Wells dug for the benefit of Harijans*

* 14 *Q*.—SRI M. ETHIRAJALU : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) the number of wells dug for the benefit of Harijans colony-wise in South Arcot district during the years 1956–57 and 1957–58; and

(*b*) the number of applications still pending disposal with the District Welfare Officer for the above years and the reasons therefor?

THE HON. SRI P. KAKKAN : (*a*) One hundred and seventy-four wells were dug for the benefit of Harijans in the South Arcot district during 1956–57 and 1957–58. A statement [a] showing the names of the villages where these wells were sunk is placed on the table of the House.

(*b*) There are seven applications pending disposal and they are under different stages such as investigation, preparation of estimates, etc.

SRI M. ETHIRAJALU : தாழ்த்தப்பட்ட மக்களுக்கு வீடுகள் கட்டிக் கொள்ளுவதற்கு நிலம் ஆர்ஜிதம் செய்யும் விஷயத்திலும், கிணறுகள் வெட்டுவதற்கு நிலம் ஆர்ஜிதம் செய்யும் விஷயத்திலும் மிகுந்த கால தாமதம் ஆகிறது. இதற்குக் காரணம் போதுமான உத்தியோகஸ்தர்கள் கொடுக்கப்படாததுதான். மேலும், ஹரிஜன இலாகா அதிகாரிகளுக்குப் போக்குவரத்துக்கு ஜீப்கள் கொடுக்கப்படவில்லை. அதனால் அவர்கள் அடிக்கடி சுற்றிப்பார்த்து, தங்கள் வேலையைச் சரிவரச் செய்ய முடியவில்லை என்று அவர்கள் ஹரிஜன நல கூட்டங்களிலே சொல்லுகிறார்கள். ஆகவே, போதுமான அதிகாரிகளையும், உத்தியோகஸ்தர்களையும் கொடுத்து, ஜில்லா ஹரிஜன நல இலாகா அதிகாரிகளுக்கு ஜீப் போன்ற வசதிகளையும் கொடுத்து, இவ்விதமான மனுக்கள் கொடுக்கப்பட்டால், அவைகளைச் சீக்கிரம் பைசல் செய்ய சர்க்கார் ஏதாவது நடவடிக்கை எடுப்பார்களா என்று கேட்கிறேன் ?

THE HON. SRI P. KAKKAN : ஏற்கனவேயே ஜில்லா ஹரிஜன நல இலாகா அதிகாரிகளுக்கு ஜீப்கள் வாங்கிக் கொடுத்து, அவர்கள் வேலைகளைத் துரிதமாக நடத்தவேண்டுமென்று அரசாங்கம் முடிவு எடுத்திருக்கிறது. எப்ரல் மாதத்தில் நீலகிரி, கன்யாகுமரி ஜில்லாக்களைத் தவிர மற்ற எல்லா ஜில்லாக்களிலும் ஜீப்கள் வாங்கிக் கொடுக்கப்படும்.

SRI T. P. SRINIVASAVARADAN : Before granting the advance for sinking a well, are the Government making sure that water is available? Many wells have been sunk but there is no water.

THE HON. SRI P. KAKKAN : Yes, Sir, only after finding out whether water is available, we will take up the scheme.

VIDWAN T. MUTHUKANNAPPAN : செங்கற்பட்டு மாவட்டத்தில் பல கிராமங்களில் இன்னும் கிணறுகளே இல்லாமல் இருக்கின்றன. அவற்றையெல்லாம் கவனித்து அந்த இடங்களில் கிணறுகள் வெட்டுவதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : கிணறுகள் இல்லாத கிராமங்கள் பற்றி அங்கத்தினர் தகவல் கொடுத்தால், அதுபற்றிக் கவனிக்கலாம்.

---

[a] Printed as Appendix II on page 158–159 infra.

9th February 1959]

SRI M. ETHIRAJALU : தென்னாற்காடு ஜில்லாவில் குடியிருப்பதற்கு மனைகளை ஆர்ஜிதம் செய்துகொடுப்பதற்கு மனுக்கள் போடப்பட்டு, 4 வருஷங்கள் ஆகியும் இன்னும் அந்த மனுக்கள் பைசல் செய்யப்படவில்லை. ஆகவே, அவ்விதமாக வந்த மனுக்களை சீக்கிரம் இனியாவது பைசல் செய்ய வேண்டுமென்று உத்தரவு போடவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : அப்படி ஏதாவது குறிப்பிட்ட இடங்களில் நிலங்களை ஆர்ஜிதம் செய்வதில் தாமதம் ஏற்பட்டிருந்தால், அதை அங்கத்தினர் என் கவனத்திற்குக் கொண்டுவந்தால், அதுபற்றித் துரிதமாக நடவடிக்கை எடுக்கும்படி ஏற்பாடு செய்யலாம்.

SRI K. V. RAMASWAMI : பொதுவாகப் பல்லடம் தாலூகாவில் பல கிராமங்களிலும், பல சேரிகளிலும் கிணறுகள் வெட்டப்பட்டிருந்தும், தண்ணீர் கிடைக்காமல் இருப்பது குறையாக இருக்கிறது. அதற்குப் பதிலாக நல்ல ஊற்று இருக்கக்கூடிய இடங்களிலே பதில் கிணறுகள் வெட்டிக் கொடுக்கப்படுமா ? அல்லது போர்கள் வைத்து அதில் தண்ணீர் கொண்டு வந்து கொடுக்கப்படுமா என்பதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : பொதுவாக, கிணறுகளில் தண்ணீர் இல்லாமல் இருந்தால், மேலும், ஆழமாக வெட்டுவதற்கு ஏற்பாடு செய்யப்படும். வெட்டிப் பார்த்தும் தண்ணீர் இல்லை என்றால், புதியதாக வேறு இடத்தில் கிணறு வெட்டி, ஜனங்களுக்குத் தண்ணீர் கிடைக்கும்படி செய்வதுபற்றி யோசிக்கப்படும்.

### *Fish-curing yards*

* 15 Q.—SRI M. ETHIRAJALU : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether there is any proposal before the Government to construct fish-curing yards through Fisheries Co-operative Societies; and

(*b*) if so, the stage at which the matter stands?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) & (*b*) There is no proposal to construct fish-curing yards through Fishermen Co-operative Societies. However, the Fishermen's Co-operative Societies and Federations requiring godown-*cum*-fish-curing yards are given each a long-term loan of Rs. 2,000 and an equal sum as subsidy for construction of small godowns and curing sheds. A statement [a] showing the names of the societies or federations, which have been granted loans and subsidies for construction of go-down-*cum*-curing sheds is placed on the table of the House.

MR. CHAIRMAN : Questions are over.

[*Note*.—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II—THE MADRAS OPEN PLACES (PREVENTION OF DISFIGUREMENT) BILL, 1958 (L.C. BILL No. 8 OF 1958).

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : Mr. Chairman, Sir, I beg to present the Report [b] of the Joint Select Committee on the Madras Open Places (Prevention of Disfigurement) Bill, 1958 (L.C. Bill No. 8 of 1958).

MR. CHAIRMAN : The Report is presented.

---

[a] Printed as Appendix III on pages 160-161 infra.
[b] Printed as Appendix IV on pages 161-166 infra.